இரவு சென்று தம்பதியி லெய்தி மனைபுகா தென்றும்போல
விரவு நியமத் தொழின்முறையே விமலர் தம்மை யருச்சித்துப்
பரவி யமுது செய்தருளிப் பள்ளி கொண்டு புலர்காலை
யரவ மணிவார் பூசையமைத் தாரூர் நகரின் மீண்டணைந்தார் (௰௬)

வந்து வணங்கி யரனெறியார் மகிழுங் கோயில் வலங்கொண்டு
சிந்தை மகிழப் பணிந்தெழுந்து புறம்பு முள்ளுந் திருப்பணிகண்
முந்த முயன்று பகலெல்லா முறையே செய்து மறையவனா
ரந்தி யமைத்த வரியவிளக் கெங்கு மேற்றி யடிபணிவார் (௰௭)

பண்டு போலப் பலநாளும் பயிலும் பணிசெய் தவரொழுக்கத்
தண்டி யடிக ளாலமணர் கலக்கம் விளைந்து சார்விலமண்
குண்ட ரழிய வேழுலகுங் குலவும் பெருமை நிலவியதா
லண்டர் பெருமான் றொண்டர்கழ லமரர் பணியு மணியாரூர். (௰௮)

நாத மறைதேர் நமிநந்தி யடிக ளார்நற் றொண்டாகப்
பூத நாதர் புற்றிடங்கொள் புனிதர்க் கமுது படிமுதலா
நீதி வளவன் றனைவேண்டி நிபந்தம் பலவு மரியணையின்
மீது திகழ விருந்தமைந்தான் வேதா கமநூல் விதிவிளங்க (௰௯)

வென்றி விடையார் மதிச்சடையார் வீதி விடங்கப் பெருமாடா
மென்றுந் திருவா ரூராளு மியல்பின் முறைமைத் திருவிளையாட்
டொன்றுஞ் செயலும் பங்குனியுத் திரமாந் திருநா ளுயர்சிறப்பு
நின்று விண்ணப் பஞ்செய்த படிசெய் தருளு நிலைபெற்றார் (உ௰)

இன்ன பரிசு திருப்பணிகள் பலவுஞ் செய்தே யேழுலகு
மன்னும் பெருமைத் திருவாரூர் மன்ன ரடியார் வழித்திறப்பா
ரன்ன வண்ணந் திருவிளையாட் டாடி யருள வெந்நாளு
நன்மை பெருக நமிநந்தி யடிக டொழுதா ராமுய்ய (உக)

தேவர் பெருமா னெழுச்சிதிரு மணலிக் கொருநா ளெழுந்தருள
யாவ ரொன்று முடன்சேவித் தெல்லாக் குலத்தி லுள்ளோரு
மேவ வன்பர் தாமுமுடன் சேவித் தணைந்து விண்ணவர்தங்
காவ லாள ரோலக்க மங்கே கண்டு களிப்புற்றார் (உஉ)

பொழுது வைகச் சேவித்துப் புனிதர் மீண்டு கோயில்புகத்
தொழுது தமமூர் மருங்கணைந்து தூய மனையுட் புகுதாதே
யிழுது மிருளசே ரிரவுபுறங் கடையிற் றுயில விலலதது
முழுதுந் தருமம புரிமனையார் வந்துட் புகுத மொழிகின்றார் (உங)

இங்கண் முடியார் பூசனைகண் முடித்துச் செய்யுங் கடன்முறையா
லங்கி தனைவேட் டமுதுசெய்து பள்ளி கொள்வீ ரெனவவர்க்குத்
தங்கள் பெருமான் றிருமணலிக் கெழுச்சி சேவித் துடனண்ணை
யெங்கு மெல்லா ருமபோத விழிவு தொடக்கிற் றெனையென்று. (உச)

ஆத லாலே குளித்ததற்குத் தூய்மை செய்தே யகம்புகுந்து
வேத நாதர் பூசையினைத் தொடங்க வேண்டு மதற்குநீ
சீத நன்னீர் முதலான கொண்டிங் கணைவா யெனச்செய்யக்
காதன் மனையார் தாமுமவை கொணரு மதற்குக் கடிதணைந்தார் (உரு)

ஆய பொழுது தம்பெருமா னருளாலேயோ மேனியினி
லேயு மசைவி னயர்வாலோ வறியோ மிறையுந் தாழாதே
மேய வுறக்கம் வந்தணைய விண்ணோர் பெருமான் கழனினைந்து
தூய வன்பா துயில்கொண்டார் துயிலும் பொழுது கனவின்கண். (உசு)

மேன்மை விளங்குந் திருவாரூர் வீதி விடங்கப் பெருமாட்டா
மான வன்பர் பூசனைக்கு வூருவார் போல வந்தருளி
ஞான மறையோ ராரூரிற் பிறந்தா ரெல்லா நங்கணங்க
ளான பரிசு காண்பா யென் றருளிச் செய்தங் கெதிரகன்றார் (உஎ)

ஆதி தேவ ரெழுந்தருள வுணர்ந்தா ரிரவர்ச் சனைசெய்யா
தேத நினைந்தே னெனவஞ்சி யெழுந்த படியே வழிபட்டு
மாத ரார்க்கும் புகுந்தபடி மொழிந்து விடியல் விரைவோடு
நாத னூர்த் திருவாரூர் புகுத வெதிரந் நகர்காண்பார் (உஅ)

தெய்வப் பெருமா டிருவாரூர்ப் பிறந்து வாழ்வா ரெல்லாரு
மைவைத் தணைய மணிகண்டர் வடிவே யாகிப் பெருகொளியா
மொய்வைத் தமர்ந்த மேனியராம் பரிசு கண்டு முடிகுவித்த
கைவைத் தஞ்சி யவனிமிசை விழுந்து பணிந்து களிசிறந்தார். (உகூ)

படிவ மாறறிப் பழம்படியே நிகழ்வுங் கண்டு பரமர்பா
லடியேன் பிழையைப் பொறுத்தருள வேண்டு மென்று பணிந்தருளாற்
குடியுந் திருவா ரூரகத்துப் புகுந்து வாழ்வார் குவலயத்து
நெடிது பெருகுந் திருத்தொண்டு நிகழச் செய்து நிலவுவார் (௩௰)

நீறு புனைவா ரடியார்க்கு நெடுநா ணியதி யாகவே
வேறு வேறு வேண்டுவன வெல்லாஞ் செய்து மேவுதலா
லேறு சிறப்பின் மணிப்புற்றி லிருந்தார் தொண்டாக் காணியெனும்
பேறு திருநா வுக்கரசா விளம்பப் பெற்ற பெருமையினார். (௩க)

இன்ன வகையாற் றிருப்பணிக ளெல்லா வுலகுந் தொழச்செய்து
நன்மை பெருகு நமிநந்தி யடிக ணயமார் திருவீதிச்
சென்னி மதியந் திருந்தியு மலைய வருவார் திருவாரூர்
மன்னர் பாத நீழன்மிகும் வளர்பொற் சோதி மன்னினார் (௩உ)

நாட்டா ரறிய முன்னாளி னன்னா லூலந்த வைம்படையின்
பூட்டார் மார்பிற் சிறியமறைப் புதல்வன் றனைப் புகலிகொளியூர்த
தாட்டா மரையின மடுவினகட் டனிமா முதலை வாய்நின்று
மீட்டார் கழலக ணினைவாரை மீளா வழியின் மீட்பவே. (௩௩)

நமிநந்தியடிகணாயனார்புராணமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௩௬௱அ.

---

முதற்காண்டமுற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.